சோற்றைப் போட்டு மாற்றினாள் மனத்தை!
ஏமாந் தாரா என்றன் கணவர்?
போய்ப் புகுந்தாரா புலியின் வாயில்?
எங்கள் பிள்ளை உங்கள் பெண்ணை
வேண்டா மென்று விளம்ப வில்லையே!
அவள் மகனுக்கே அவளைக் கட்ட
இப்படி எல்லாம் இயம்பினார் போலும்!
மாதம் ஒன்றாகியும் வரவில்லை அவர்.
மகனை இங்கே வரவழைக் கின்றேன்.
சொல்லிப் பார்ப்போம்; சொன்னாற் கேட்பான்.
(நல்லமுத்துவிடம் மண்ணாங்கட்டியும் இரிசனும்
சொல்லுகிறார்கள்.)

**மண்ணாங்கட்டி :**

ஒருமாத மாக உன்றன் தந்தையார்
அரச லூரில் அம்மாக் கண்ணிடம்
விளையாடு கின்றார். வீட்டை மறந்தார்.
அவர்தாம் அப்படி ஆனார். உன்றன்
திருமணம் பற்றிய சேதி எப்படி?
இரிசனார் பெண்ணை ஏற்பாடு செய்தோம்;
உடனே மணத்தை முடிக்க வேண்டும்.

**நல்லமுத்து :**

அப்பா இல்லை. அது முடியாது.
விவாக முகூர்த்த விளம்ப ரத்தில்
அப்பா கையெழுத்தமைய வேண்டும்.
பாத பூசை பண்ணிக் கொள்ள
அப்பா இல்லை! எப்படி முடியும்?
திருமண வேளையில் தெருவில் நின்று
வருபவர் தம்மை வரவேற் பதற்கும்

அப்பா இல்லை! எப்படி முடியும்?
புரோகிதர் தம்மைப் போய ழைக்க
அப்பா இல்லை! எப்படி முடியும்?
அரசாணிக்கால்நட, அம்மி போட,
நலங்கு வைக்க, நாலு பேரை
அழைக்க, நல்லநாள் அமைக்க, அம்மன்
பூசை போடப் பொங்கல் வைக்க
அப்பா இல்லை! எப்படி முடியும்?

**இரிசப்பன் :**

அப்பன் இல்லையே அதற்கென்ன செய்வது?

**நல்லமுத்து :**

சோற்றை உண்டு சும்மா இருப்பது!

**மண்ணாங்கட்டி :**

அம்மாக் கண்ணின் அழகு மகனுக்கு
மகளைக் கட்டி வைக்கச் சொல்லிக்
கெஞ்சினா ராமே அவரை
இரக்கம் இருந்ததா இனிய தந்தைக்கே?

**நல்லமுத்து :**

என்னருந் தந்தை இயம்பிய படியே
இவரின் மகளை அவன்மணக் கட்டும்.
"தெருவில் என்ன பெரிய கூச்சல்"
போய்வரு கின்றேன் பொறுப்பீர் என்னை!

(நல்லமுத்து போனபின், இரிசனும், மண்ணாங்கட்டியும் பேசுகின்றார்கள்.)

**மண்ணாங்கட்டி :**

தன்மானம் இல்லாத் தடிப்பயல் என்மகன்,
உணர்ச்சி இல்லா ஊமை என்மகன்.
அடிமை எண்ணம் உடையவன் என்மகன்.
தனக்குப் பார்த்த தையலை, அப்பன்
அயலான் மணக்கச் செயலும் செய்தால்
துடிக்க வேண்டுமே தடிக்கழுதை மனம்!
இல்லவே இல்லை! என்ன செய்யலாம்
சாப்பி டுங்கள்! சற்று நேரத்தில்
வருவான் பையன் ஒருமுறைக் கிருமுறை
சொல்லிப் பார்ப்போம்; துன்பம் வேண்டாம்.

## காட்சி - 9

## தமிழ் உணர்ச்சி

(இரிசப்பனும் மண்ணாங்கட்டியும் பேசியிருக்கிறார்கள்)

**இரிசப்பன் :**

எங்கே போனான் உங்கள் பிள்ளை?

**மண்ணாங்கட்டி**

கூச்சல் கேட்டதாய்க் கூறிப் போனான்.

**இரிசப்பன் :**

என்ன கூச்சல்? எங்கே கேட்டது?

**மண்ணாங்கட்டி :**

கேட்டது மெய்தான், கிழக்குப் பாங்கில்
வாழ்க தமிழே! வீழ்க இந்தி! என்று.

**இரிசப்பன்**

எந்த உணர்ச்சியும் இல்லாப் பிள்ளை

அந்த இடத்தை அடைந்த தென்ன?

**மண்ணாங்கட்டி :**

என்ன இழவோ யார்கண் டார்கள்?

(தமிழ்ப் புலவர் அமுதனார் வந்து இரிசனிடத்திலும், மண்ணாங்கட்டியிடத்திலும் சொல்லுகிறார்.)

**அமுதனார் :**

உங்கள் பிள்ளையா நல்லமுத் தென்பவன்?

**மண்ணாங்கட்டி :**

ஆம்ஆம் ஐயா! அன்னவன் எங்கே?

**அமுதனார் :**

யானதைச் சொல்லவே இங்கு வந்தேன்.
இந்த அரசினர் செந்தமிழ் ஒழித்துத்
தீய இந்தியைத் திணிக்கின் றார்கள்.
தமிழ்அழிந் திட்டால் தமிழர் அழிவார்.
நம்தமிழ் காப்பது நம்கடன் அன்றோ?
போருக்குத் திராவிடர் புறப்பட் டார்கள்.
திராவிடர் கழகம் சேர்ந்துதான் உங்கள்
நல்ல முத்தும்! நல்லது தானே!

**இரிசப்பன் :**

எந்த உணர்ச்சியும் இல்லாப் பிள்ளை
இந்தக் கிளர்ச்சியில் என்ன செய்வான்?

**மண்ணாங்கட்டி :**

திருமணம் செய்யச் சேயிழை ஒருத்தியை
அமைத் திருந்தார் அவனின் தந்தையார்!

பாரடா நீபோய்ப் பாவை தன்னை
என்றால், அதையும் ஏற்க வில்லை.
தரும்படி சொன்னார் தந்தை என்றால்,
அப்பா மனப்படி ஆகுக என்றான்.
இப்படிப் பட்டவன் என்ன செய்வான்?
அப்பா அயலவள் அகத்தில் நுழைந்தார்.
இப்பக் கத்தில் இனிவாரார் ஆதலால்
திருமணத்தை நீ செய்துகொள் என்றால்,
ஓலை விடுக்கவும், ஊரைக் கூட்டவும்,
சாலும் கரகம் தனியே வாங்கவும்.
பாத பூசை பண்ணிக் கொள்ளவும்
அப்பா வேண்டும்என்று ஒப்பனை வைக்கிறான்.

**அமுதனார் :**

மடமையில் மூழ்கி மடிகின்றான் அவன்.
தன்மா னத்தைச் சாகடிக் கின்றான்,
மரக்கட் டைபோல் வாழ்ந்து வந்தான்.
இந்த நிலைக்கெலாம் ஈன்றவர் காரணர்.
ஆயினும் தமிழ்ப்பற் றவனிடம் இருந்தது.
திராவிடர் கழகம் சேர்ந்து விட்டான்.
இனிமேல் அவனோர் தனியொரு மறவன்!
அரசினர் சிறையில் அடைத்தார் அவனை!

**இரிசப்பன் :**

என்ன? என்ன? எப்போது விடுவார்?

**மண்ணாங்கட்டி :**

இருந்தும் பயனிலான் இருக்கட்டும் சிறையில்.

**அமுதனார் :**

எப்போது வருவான் என்பத றியோம்.

துப்பிலா அரசினர் சொல்வதே தீர்ப்பு.
நான்கூறுகின்றேன். நல்ல முத்துவின்
திருமணம் விரைவில் சிறப்ப டைக.

## காட்சி - 10

### திருமணம் என் விருப்பம்

(இரிசப்பன் வீட்டில், வெள்ளையப்பன் பேசுகிறான்.)

**வெள்ளையப்பன் :**

அம்மாக் கண்தன் சொத்தெலாம் அளிப்பாள்.
உம்மகள் தன்னை அம்மாக் கண்ணின்
மகனுக்கு கே,திரு மணம்செய் விப்பீர்
என்மகன் பெரியதோர் இளிச்ச வாயன்!

**இரிசப்பன் :**

அம்மாக் கண்ணின் அடியை நத்தி
வீணில் வாழும் வெள்ளை யப்பரே,
உமது சொல்லில் உயர்வே யில்லை.
எமது கொள்கை இப்படி யில்லை.
நல்லமுத் துக்கே நம்பெண் உரியவள்,
பொல்லாப் பேச்சைப் புகல வேண்டாம்.

(அதே சமயத்தில் நல்லமுத்து வந்து இரிசனிடம்
இயம்புகின்றான்.)

**நல்லமுத்து :**

உம்மகள் என்னை உயிரென்று மதித்தாள்
திருமணம் எனக்கே செய்துவைத் திடுக!

(வெள்ளையப்பன் தன் மகனான நல்லமுத்தை நோக்கிக்
கூறுகின்றான்.)

என்விருப் பத்தை, எதிர்க்கவும் துணிந்தாய்.
உன்விருப் பத்தால் என்ன முடியும்?
இன்று தொட்டுநீ வாயிலின்
வழியும் காலெடுத்து வைக்க வேண்டாம்.
என்றன் சொத்தில் இம்மியும் அடையாய்.
நான்சொன் னபடி நடந்து கொண்டால்,
திருமணம் பிறகு செய்து வைப்பேன்.
அம்மாக் கண்ணின் அழகு மகனே
இந்நாள் இந்த எழில் மடந்தையை
மணந்துகொள் ளட்டும், மறுக்க வேண்டாம்.

நல்லமுத்து:

திருமணம் எனது விருப்ப மாகும்.
ஒருத்தியும் ஒருவனும் உள்ளம் கலத்தல்
திருமணம் என்க. இரிசனார் மகளும்
என்னை உயிரென எண்ணி விட்டாள்.
நானும் என்னை நங்கைக் களித்தேன்.
உம்வீட்டு வாயிலை ஒருநாளும் மிதியேன்.
உம்பொருள் எனக்கேன்? ஒன்றும் வேண்டேன்.
நானும்என் துணைவியும் நான்கு தெருக்கள்
ஏனமும் கையுமாய், எம்நிலை கூறி
ஒருசாண் வயிற்றை ஓம்புதல் அரிதோ!
ஆட்சித் தொட்டியில் அறியாமை நீர்பெய்து
சூழ்ச்சி இந்திஇட்டுத் துடுக்குத் துடுப்பால்
துழவிப் பழந்தமிழ் அன்னாய் முழுகென
அழுக்குறு நெஞ்சத் தமைச்சர் சொன்னார்.
இழுக்குறும் இந்நிலை இடர வேண்டி
நானும்என் துணைவியும் நாளும் முயல்வதில்
சிறைப்படல், காதல் தேனருந் துவதாம்!

இறப்புறல் எங்கள் இன்பத்தி னெல்லையாம்.

(வெள்ளையப்பனை நோக்கி இரிசன் சொல்லுகிறான்:)

வெள்ளை யப்பரே வெளியில் போவீர்
என்மகள் உம்மகன் இருவரும் நாளைக்குக்
காதல் திருமணம் காண்பார். நீவிரோ
அம்மாக் கண்ணொடும் அழகு மகனொடும்
இம்மா நிலத்தில் இன்புற் றிருங்கள்.

(நல்லமுத்து தன் திருமணத்தின்பின், துணைவியுடன்
இந்தி எதிர்ப்பு மறியலுக்குப் புறப்படுகின்றான்.)

**நல்லமுத்து :**

வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்
இந்தி ஒழிக! இந்தி ஒழிக!

(சென்று கொண்டிருக்கையில், நல்லமுத்தின் தாய்
அவர்களைத் தொடர்கிறாள்.)

**மண்ணாங்கட்டி :**

இன்பத் தமிழுக் கின்னல் விளைக்கையில்
கன்னலோ என்னுயிர்? கணவனும் வேண்டேன்.
உற்றார் வேண்டேன்; உடைமை வேண்டேன்.
இந்தி வீழ்க! இந்தி வீழ்க!
திராவிட நாடு வாழிய!
அருமைச் செந்தமிழ் வாழிய நன்றே!

1948



# 7 பெண்கள் விடுதலை

கிழக்கு வெளுக்கக், கிளிமொழியாள் தங்கம்
வழக்கப் படி, வீட்டு வாயிற் படி துலக்கிக்
கோலமிட்ட பின்பு குடித்தனத்துக் கானபல
வேலை தொடங்கி விரைவாய் முடிக்கையிலே
ஏழுமணிக் காலை எழுந்தாள். அவள் மாமி,
வாழுகின்ற பெண்ணாநீ வாடிஎன்றாள் தங்கத்தை,
இந்நேரம் தூங்கி இருந்தாயா? என் பிள்ளை
எந்நேரம் காத்திருப்பான் இட்டலிக்கும் காப்பிக்கும்?
நின்றபொற் பாவை நிலத்தில் விழச்செய்தாள்.

* * *

வாரிச் சுருட்டி மலர்க்குழலைத் தான் செருகிக்
கூரிய வேல்விழியாள் கொண்டதுயர் காட்டாமல்
தொட்ட பணிமுடிந்துச் சுள்ளி அடுப்பேற்றி
இட்டலியும் பச்சடியும் இட்டஒரு தட்டுடனும்,
காப்பி யுடனும் கணவன் தனி அறையில்
போய்ப்பார்த்தாள் இன்னும் பொழுது விடியவில்லை
என்று நினைத்தே இருவிழி திறக்காமல்
பன்றிபோல் பாயில் படுத்துப் புரளுகின்ற
அத்தான் நிலைகண்டாள். அந்தசொல் தான்நினையாள்
முத்தான வாய்திறந்து மொய்குழலாள் கூறலுற்றாள்:
எட்டு மணி அத்தான் எழுந்திருப்பீர். தந்தையார்
திட்டுவார், கண்கள் திறப்பீர் விரைவாகக்

காலைக் கடன்முடித்துக் காப்பீர் விரைவாகக்
காலைக் கடன்முடித்துக் காப்பி முடிந்துடனே
வேலைக்குப் போவீரே என்று விளம்பக்
கழுதைபோல் தன்னிரண்டு கால்கள் உயர்த்தி
அழகு மனையாளை அப்படியே தானுதைத்தே
தூக்கத்தில் வந்தெனக்குத் தொல்லை கொடுக்கின்றாய்
போக்கற்ற நாயே நீ போடி எனப் புகன்றான்.

* * *

செம்போடும் தட்டோடும் சேயிழையாள் கூடத்தில்
வெம்பும் உளத்தோடும் மீளவந்து பார்க்கையிலே
மாமனார் வந்து மலைபோலக் காத்திருக்க
ஊமைபோல் சென்றே உணவை எதிர்வைத்தாள்.
எங்கே உன் அத்தான்? எழுந்திருக்க வில்லையா?
எங்கிருந்து வந்தாய்நீ என்குடித்த னம்பெடுக்க?
இன்னுமா தூங்குகின்றான்? ஏன்குரங்கே? மூஞ்சியைப் பார்.
ஒன்பதுக் கெழுந்திருந்து பத்துமணிக்கு ஊண்முடித்துக்
கையில் குடையேந்திக் காலிற் செருப்பணிந்தே
ஐயா தம் வேலைக்குச் சென்றால் அடுத்த நாள்
வீட்டுக்குப் போக விடைபெறலாம் அல்லவோ?
காட்டுக் குறத்திபோல் கண்ணெதிரில் நிற்காதே!
என்றுதன் பிள்ளை இழைத்த பிழைக்காகக்
கன்னல் மொழியாள்மேல் காய்ந்து விழுந்தே மாமன்
உண்ணத் தலைப்பட்டான் இட்டலியை! ஒண்டொடியாள்
எண்ணத் தலைப்பட்டாள் தன்னிலையை! என்செய்வாள்.

* * *

அத்தான் எழுந்தான் அரைநொடியிற் பல்துலக்கிப்
பொத்தல்நாற் காலியின்மேற் பொத்தென்று குந்தினான்,
உள்ளே எழுந்தபடி ஓவென்று கூச்சலிட்டான்,
பிள்ளை நிலைகண்டும் பெற்றோர் அருகிருந்தும்
கொல்லைக் கிணற்றில் குடி தண்ணீர் மொண்டிருந்த
மெல்லி விரைந்துவந்து மேலே எடுத்துவிட்டாள்.

புண்பட்ட தோஎன்று பூவையவள் பார்க்கையிலே
கண்கெட்ட துண்டோ? கடிய நீ ஓடிவந்து
தூக்கினால் என்ன? தொலைந்துபோ என்றுரைத்துத்
தாக்கினாள், தையல் தலைசாய வீழ்ந்தெழுந்தாள்.

* * *

அப்போது மாமி அருமை மகனிடத்தில்
கொப்பேறிக் குந்தும் குரங்குபோல் உன் மனைவி
மேலேறிக் குந்தியே நாற்காலி மேற்பிரம்பைக்
கேலி பிறச் செய்யக் கிழித்துத் தொலைத்துவிட்டாள்
என்றாள். அருகில் இருந்திட்ட மாமனோ
நின்றால் அடித்திடுவான் நீபோ என்றே உரைக்க
அப்படியே பிள்ளையும் ஐந்தாறு தந்திடவே
பொற்பாவை கண்ணிற் புனல்சாய உட்சென்றாள்.

* * *

மாலை ஒருமணிக்கு மங்கை அடுப்பருகில்
வேலைசெய்யும் போது முற்பகுதி வீட்டறையில்
எண்ணெய்ஏ னத்தை எலிஉருட்டிப் போயிருக்கப்

பெண் உடைத்தாள் என்று பெரும்பழியை மாமி அவள்
சூட்டினாள் அந்தக் துடுக்குமகன் தாயின் சொல்
கேட்டுக் கயிற்றால் கிளிமொழியை ஓர்தூணில்
கட்டினான்; கட்டிக் கழியால் அடிக்கையிலே
மங்கையைப் பெற்றவர்கள் வந்தார். நிலைகண்டார்!

தங்கமே என்று தலைமீது கைவைத்துத்
தேம்பி அழுது, சிறிது பொறுப்பீரோ
கட்டவிழ்க்க மாட்டீரோ என்று கதற, அவன்
கண்ணான பெண்ணாளைக் கட்டவிழ்த்துவிடு என்றான்.
பெண்ணாளின் மாமியவள் "பெண்ணெனன்றால் இப்படியா!

கொண்டவனை மீறுவதா? கொண்டவனை அண்டாமல்
கண்டவனை அண்டிக் கதை பேசப் போவதுண்டா!
என்று பலபொய் எடுத்தெடுத்து வீசலுற்றாள்;
என்றைக்கும் வாழாள் இவள்' என்றாள் மாமனும்.



அந்நாள் இரவில், அணங்குதனை, பெற்றவர்கள்
பொன்னையன் வீட்டுக்குப் போய், இதனைக் கூறி
எதுசெயலாம் என்று வினவ, அவன் சொல்வான்;
இதுவெல்லாம் முன்னாள் பிரமன் எழுதியதால்
ஆரும் அழிக்க முடியாது, கொண்டவனால்
நேருவதை நாம்தடுக்க எண்ணுவதும் நேர்மையில்லை,
பெண்டாட்டி என்றும் பிழைசெய்யக் கூடியவள்,
கொண்டவன் கொல்வான், அணைப்பான் அவன் விருப்பம்

இந்நாள் இதுவெல்லாம் நான்சொல்லும் சொல்லல்ல.
அந்நாள் மனுவே அழுத்தி எழுதியவை.
என்றுரைக்கப், பெற்றவர்கள் உள்ளம் எரிந்தவராய்க்
கன்றைப் பிரியும் கறவைஎனக் காலையிலே
பெண்ணைப் பிரிந்து பெருந்துன்பம் மேலிட்டு
வெண்ணெய்நல்லூர் வண்டியின் மேலேறிச் சென்றார்கள்.

வஞ்சி, மரச்சருகு வாதானூர்ச் சாலையிலே
கொஞ்சநஞ்ச மல்ல குவிந்து கிடந்திடுசே
ஆலைச்சங் கூதும் அதிகாலையில் நீபோய்
நாலுசுமை கட்டிவந்தால் நாலுபணம் மீதியன்றோ?
என்றுரைத்தாள் மாமி. இதுகேட்ட தங்கம், தன்
பொன்னான அத்தான்பால் போயுரைப்பா ளாயினாள்:
வஞ்சி, சருகுக்கு மாமியார் போ என்றார்,
கொஞ்சம் விலையே கொடுத்தால் அதுகிடைக்கும்;
பத்துக்கல் ஓடிப் பாடாய்ப்பாடு பட்டிட நாம்
சொத்தில்லா ஏழைகளா சொல்லுங்கள் என்றுரைத்தாள்.

நன்செயிலும் புன்செயிலும் நானூறு காணியுண்டு
இன்னுமுண்டு தோப்பும் இருப்பும். இருந்தாலும்
என்தாயின் சொல்லை நீ ஏன்மறுத்தாய்? நாள்தோறும்
சென்று சுமந்துவர வேண்டுஎன்றான் தீயவனும்!
நெஞ்சம் துடித்தாள். நிலைதளர்ந்தாள். அத்தானைக்
கெஞ்சினாள், அந்தப் பழக்கம் கிடையாதே!
ஒன்றியாய்ப் போவதற்கும் என்னுள்ளம் ஒப்பாதே.
சென்றுரைப்பீர் மாமியிடம் செல்லா வகைசெய்ய,
என்றான். பயனில்லை. இரவு கழிந்தவுடன்

சென்றாக வேண்டுமென்று சிங்கக் கனாக்கண்டாள்.

மாடியிலே மங்கையர்க ளோடிருந்து பந்தாடி
வாடினேன் என்று வலஞ்சுழியம் அப்பவகை
உண்ணென்று தாய்எனக்கே ஊட்டுகையில் நான் அவற்றை
மண்ணென் றுமிழ்ந்ததெலாம் எண்ணி அழுவேனா?
சூட்டுமலர் வாட, மணிச் சுட்டியொடு நான்களைந்தே
போட்டு வயிரப் புதுச்சுட்டி வாங்கியதை
எண்ணி அழுவேனா! எருமைமுது கென்புபோல்
பண்ணிய தங்கமணிக் கோவை பழையதென்று
வேலைக்கா ரிக்கு விடியலில் நான்தந்து
மாலையிலே மற்றொன்று வாங்கியதை எண்ணி
அழுவேனா? மான்குட்டி கேட்ட அளவில்
எழுதி வரவழைத்த தெண்ணி அழுவேனா?

அண்டைத் தெருவுக்கும் ஆடும் இருகுதிரை
வண்டிஎன்றால் வந்துநின்ற தெண்ணி அழுவேனா?
இந்நாளில் என் கணவர் இல்லத்தில் நாள்தோறும்
தொன்னையிலே நொய்க்கஞ்சி தூக்கிக்குடி என்னும்
அன்பில்லார்க் காட்பட்ட தெண்ணி அழுவேனா?
என்பொடிய நான் உழைப்ப தெண்ணி அழுவேனா?
உள்ளம் அறிய ஒருபிழைசெய் யாவிடினும்
தள்ளித் தலையுடைப்ப தெண்ணி அழுவேனா?
வஞ்சிக் சருகெடுத்து வா' என்ற சொல்லுக்கே
அஞ்சி நடுங்குவ தெண்ணி அழுவேனா?
என்று துடித்தழுதாள் ஏனழுதாய் என்றுரைத்த
முன்வீட்டு முத்தம்மா என்னும் முதியவள்பால்!
அவ்போது தங்கத்தின் அத்தானும் மாமனும்
எப்போதும் போல இருந்தார்கள் திண்ணையிலே!

ஆளவந்தார்க் காளாய் அமைந்திட்ட காவலர்கள்
வாள்இடுப்பில் கட்டி வலக்கையில் செப்பேட்டை
ஏந்தி, இவர்கள் எதிரினிலே வந்து நின்று
சூழ்ந்துள்ள மக்களுக்குச் சொல்வார் வெங்குரலில்:
பெண்டாட்டி என்ற பெயர்அடைந்த நாள்முதலே
ஒண்டொடிக்கும் சொத்தில் ஒருபாதிக் குண்டுரிமை!
தம்மனைவி செத்தால்தான் வேறுமணம் தான்செயலாம்
இன்னல் மனைவிக் கிழைத்தல் கொலைக்குற்றம்.
ஆளவந்தார் ஆணைஇதுவென்றே அறிவித்து.
வாளுருவிக் காட்டி வழிநடந்து சென்றார்கள்.

* * *

மங்கை அதுகேட்டாள், மணவாளனும் கேட்டான்
அங்கிருந்த மாமனும் கேட்டாள், அவன் சென்று
தன்மனைவி காதில் தனியாக நின்றுரைத்தான்
முன்நிகழந்த துன்ப வரலாறு முற்றிற்றே,

* * *

பின்பொருநாள் வீட்டுப் பெருங்கணக்கு மாறுபட
என்னவகை கண்டறிவ தென்றறியா மாமன்தான்
தன் மகனைக் கேட்டும் சரிசெய்யத் தோன்றாமல்
அன்பு மருமகளை அண்டி“ஒருவிண்ணப்பம்
என்றான், மருமகளும் என்னவென்றாள்” இக்கணக்கில்
நின்ற பிழைதன்னை நேராக்க வேண்டுமென்றான்,
இன்னும் அரைமணிக்குப் பின்னால் நினைப்பூட்டிச்
சொன்னால் சரிபார்க்கத் தோதுபடும் என்றுரைத்தாள்.

* * *

அப்போது மங்கையின் அன்னையும் தந்தையும்
எப்போது போல்பார்க்க எண்ணியங்கு வந்தார்கள்.

* * *

வீட்டுத் தனியறையில் மெல்லிஇருந்தாள், தலையை
நீட்டாமலே வெளியில் நின்றிருந்தார் மாமனார்,
அத்தான் அலுவ லகத்தினின்று வீடுவந்து
முத்துநகைக் காரி முகம்பார்க்க எண்ணி
மனையின் அறைக்குள் "வரலாமா" என்று
தனிவிர லால்கதவைத் தட்டி வெளிநின்றான்,
காத்திருக்கச் சொன்னாள், கனிமொழியாள், தான் கணக்குப்
பார்த்தபின் பெற்றோரைப் பார்த்துப் பல பேசி
மாமன் கணக்கை வகைசெய்து காட்டிய பின்
நாமலர்ந்தாள் நல்லத்தா னோடு.

○ ○ ○

# 8 மதத்தை விடு!

தெருவறைச் சன்னல் தன்னைத்
திறப்பாள்.என் வரவு பார்ப்பாள்.
திருமுகம் காண்பேன், முல்லைச்
சிரிப்பினிற் சொக்கி நிற்பேன்.
ஒருநொடி தனிலே அன்னாள்
ஒளிமுகம் மறைந்து போகும்;
அரிவையின் முகநி லாவை
அடுத்தநாள் காண்பேன் அங்கே!

நடந்தது நாள் ஒவ்வொன்றாய்!
நகர்ந்தன நான்கு திங்கள்!
மடமயில் தனை நெருங்கும்
வாய்ப்பில்லை. பேச்சும் இல்லை
அடைந்தேன்இன் றவள் வரைந்த
அழகிய "காதல் அஞ்சல்"
"அடைகஎன் வீட்டைக், காலை
ஐந்தரை மணிக்கு நீவிர்"

அஞ்சலைப் படித்தான் பாரி,
அற்றைநாள் இரவு தன்னைக்
கேட்கவே இல்லை அஃது;
மிஞ்சுகா லணிகள் பூண்ட
மெல்லிபோல் மெதுவாய்ச் செல்லக்,
கொஞ்சிற்றுப் பரிதி கீழ்பால்;
கொடியிடை வீடு சென்றான்.

வருகஎன் றுரைத்தாள்-கண்ணால்
வரவேற்று நின்றாள். பாரி
இருகையால் தழுவப் போனான்
“இரும்” என்றாள். “என்ன” என்றான்.
ஒருமனப் பட்டு, வாழ்க்கை
ஒப்பந்தம் செய்து கொள்வோம்
பருகுவோம் பிறகு காதற்
பழச்சாற்றை என்று சொன்னாள்.

உம்மதம் என்ன என்றாள்.
உம்பெயர் என்ன என்றாள்:
“எம்மதம் ஆனால் என்ன,
நான்ஒரு முசிலீம்” என்றான்.
செம்மைசேர் புனை பெயர்தான்
பாரிஎன் றுரைத்தான் செம்மல்.
“இம்மியும் நமது வாழ்வில்
ஒற்றுமை இராதே” என்றாள்.

என்மதம் மயிலே உன்னை
வரவேற்க மறுப்ப தில்லை.
கன்னலின் உதட்டை என்பால்
காட்டுக என்றான் காளை.
நன்மனத் தீர், உமக்கு
நான் வேண்டு மாயின், நீவிர்
உம்மதம் துறக்க வேண்டும்
உள்ளத்தும், வெளிப் புறத்தும்!

என்றனள். இதனைக் கேட்டாள்.
திடுக்கிட்டான். இயம்பு கின்றான்;
என்மதம் இசுலாம். ஆம் ஆம்,
எனினும்நான் திரா விடன்தான்.
என்றனன். மங்கை நல்லாள்,
இதுகேட்டாள். சிரித்துச் சொல்வாள்;
மன்னிய திரா விடர்க்கு
மதமில்லை, சாதி யில்லை.

தளைமதம் விடுக. நீவிர்
தனிவிடு தலைமேற் கொள்க.
களையினை நெஞ்ச கத்துக்
கழனியில் வளர்த்தல் வேண்டாம்
இளமையின் பயனும் வாழ்வின்
இன்பமும் மதத்தில் இல்லை
விளைந்திட்ட தீமை எல்லாம்
மதவெறி விளைத்த தென்றாள்!

நினைவினில் ஆழ்ந்தான். நெஞ்சில்
நிறைஇருள் நீங்கப் பெற்றான்.
தனிப்பெருந் திராவிடத்தைத்
தான்எனக் கண்டான். மானே
இனிஒரு மதத்துக் காட்பட்
டிரேன்என்றான். தூய்மை யான
மனத்தினை அவளுக் கீந்தான்.
மங்கையும் தன்னைத் தந்தாள்.

- குயில் 1948



# 9 அறிவு மணம்

புதுநிலவு போல்முகத்தாள் நின்றாள் வெளியில்
மிதிவண்டி மேல்விரைந்து சென்றான்-மதிவாணன்!
பார்தாள் அவன்பார்த்தான் பாய்காதல் மின்தாக்க
வேர்த்தாள் அவன்வேர் தான் நெஞ்சு.

மறுநாளின் மாலை மதிவாணன் வந்தான்
பிறைநுதலா ளும்காணப் பெற்றாள்-சிறுக
விரித்தான், விரித்தாள் இதழ்க்கூட்டு! மின்னச்
சிரித்தாள் சிரித்தான்அச் சேய்.

மூன்றுநாள் முத்துநகை நின்றிருந்தாள் முன்போல
தோன்றாத் துணையானான் தோன்றினான்-ஈன்றாரை
மீறென்றான் மீறினாள்! மின்னே மிதிவண்டி
ஏறென்றான் ஏறினாள் பெண்.

பெற்றோர் இதுகேட்டார் சற்றும் பிடிக்கவில்லை,
அற்றனவே சாதிமதம் ஆ என்றே-சுற்றமுடன்
கட்டைவண்டி ஏறிக் கதறி மிதிவண்டி
தொட்டவழிச் சென்றார் தொடர்ந்து.

சாதிமதக் கட்டைவண்டி தன்னிலே செல்லுகையில்
கோதையும் சேயும் குளத்தூர்போய்-ஓதியே
அன்புற்றார் வாழ்த்த அறிவு மணமுடித்தே
இன்புற் றிருந்தார்கள் நன்கு.

– குயில் 1948



# 10 மூட நம்பிக்கை

**காக்கைசொல் நம்பிக் காசைமட்டும் போக்கடிக்காதே**

காக்கை இறைப்பில் சுத்திக் கிடந்தது.
வீட்டுக் காரன், கேட்டு வருந்தினான்.
பறந்தது காக்கை; சிறிதுநே ரத்தில்
மறந்த நண்பன் வந்தான் விருந்தாய்!

மற்றும் ஒருநாள், ஒன்பது பேர்கள்,
வரலா னார்கள். வருவதன் முன்பு
காக்கை எதுவும் கத்தவே யில்லை.
காக்கை மறந்ததாய்க் கருதினான் வீட்டினன்.

ஒருநாள் காக்கை ஓயாது கத்தவே
வரும் விருந்தென்று வழிபார்த் திருந்தான்.
அஞ்சு மணிவரை ஆருமே வருகிலர்
அஞ்சல் வந்த அயலூ ரினின்றும்
ஒருவன் வருவதும், ஓலை வருவதும்
சரிநிகர் என்று தான்நினைத் திருந்தான்.

நாளை வருவதாய் நண்பன் ஒருவன்
ஆள் ஒருவனிடம் அஞ்சல் அனுப்பினான்.
மறுநாள் காக்கையும் வாய்ப்பறை அறைய
அறிவித்தபடி அவனும் வந்தான்.

மாரி யம்மன் தேருக்கு நண்பன்
காரூரினின்று கடிது வருவான்
என்று நினைந்துகொண் டிருந்தான் வீட்டினன்.

அன்று காக்கையின் அறிக்கை தன்னை
நோக்கி இருந்தான் காக்கையயும் வந்தது.
காக்கா காக்கா என்று கத்தியது.
மனைவியை அழைத்து, வருபவனுக்குத்
தனியே ஒருபடி சமை எனச் சொன்னான்.
காக்கை மேலும் கத்தியே கிடத்தது.
நோக்கியே, துப் பாக்கியோ டொருவன்
அண்டைவீட் டின்மேல் அமைவாய் வந்து
குண்டு பாய்ச்சிக் கொன்றான் காக்கையை.
கரிய காக்கை கழறிய வண்ணம்
வர இருந்தவன் வந்து சேர்ந்தான்.
தனியே சமைக்கச் சாற்றிய வண்ணம்
மனையாள் சமைத்தாள், வந்தவன் உண்டான்.

வீட்டுக் காரனே விளம்புவேன் கேட்பாய்:
மோட்டுக் காக்கை முழுங்குவதுண்டு.
மக்கள் விருந்தாய் வருவ துண்டு
மும்முறை அன்று முந்நூறு முறை!
இம்முறை சரியாய் இயலுவதுண்டு.
காக்கைசொல் நம்பிக் காசை மட்டும்
போக்கடிக்காதே! புகல்வேன் இன்னும்
தன்பின் தொடரும் சாவை அறியாக்
கன்னங் கரிய காக்கையா அறியும்
இல்லிடை விருந்து வருவதை?
நல்லதா மூட நம்பிக்கையதே?



# 11 முதியோர் காதல்

"தோழனே உன்னிடத்தில் சொல்லுகின்றேன், என்காதல்
பாழாகக் கூடாது. பாழானால் வாழ்வேது?
நேற்றுமுன்னாள் நேரிழையை நேரினிலே கண்டேன் நான்,
நேற்றிரவும் கண்டு நெடு நேரம் பேசினேன்.
என்னைக் கணவனென எண்ணிவிட்டாள் ஆதலினால்
பொன்னான வாய்திறக்கப் பூவையவள் நாணமுற்றாள்.
சின்ன வயதுடையாள், தேவைக்குத் தோதுடையாள்
மின்னல் இடையாள், மிகுமையல் கொண்டுள்ளாள்.
என்னையவள் காதலித்தல் யானறிவேன். நான் அவளைப்
பொன்னாய் மதிப்பதையும் போயுரைக்க வேண்டாமா?
ஆதலின் நீபோய் அவளிடத்தில் கூறிவிடு.
மாதரசி சொல்வதைநீ வந்துசொல்வாய் என்னிடத்தில்!
செங்கதிரும் மேற்கில் மறைந்ததுகாண்! தேனிதழாள்
அங்கிந்த நேரம் அழகாக வந்துநிற்பாள்.
மாமரத்தின் தெற்கில் வழிபோகும், அங்கே ஓர்
பூமரமும் நிற்கும் புளியமரத் தண்டையிலே,
சோளம் வளர்ந்திருந்கும் கொல்லையொன்று தோன்றும், அதன்
நீள வரப்பினில்தான் நின்றிருப்பாள் என்கின்றேன்"
என்று தலைவன் இசைக்கவே, அத் தோழன்

"இன்றிரவே சந்திக்க எண்ணமா" என்றுரைத்தான்.
ஐயையோ இன்னும் அரைநொடியில் அன்னவளை
மெய்யிறுக நான்தழுவ வேண்டுமடா தோழா,

விரைந்தோடு, மங்கையிடம் என்னுடைய மேன்மை,
பெருஞ்செல்வம், கல்வி, பெரியபுகழ் அத்தனையும்
சொல்லி மடமயிலாள் தொட்டிழுக்கத் தோதுசெய்வாய்
வல்லியிடம் என்றன் வயதைமட்டும் கூறாதே!
ஆங்கே பிறப்பில் அமைந்ததென்று சொல்லிவைப்பாய்!
தேன் தடவ நேர்ந்ததனால் சேர்ந்த நரையென்று
மான்விழியா ளுக்குரைத்து வைத்துவிடு முன்னமே!

முப்பத்திரண்டு பல்லும் மோழையே, ஏனென்றால்
உப்பில்லாப் பத்தியத்தால் அப்படிஎன் றோதிவிடு!
கண்ணின்ஒளி மங்கியதைக் காதலிக்குக் கூறாதே.
பெண்ணரசை மெல்லத் தடவிப் பிடித்திடுவேன்
சார்ந்த இருட்டில் தடமாட்டம் யாருக்கும்
வாய்ந்த இயற்கைஎன வஞ்சியவள் எண்ணிடுவாள்
கற்பை எனக்களித்த பின்பு கதை தெரிந்தால்
குற்றமில்லை போ போ போ என்றான் கொடுங்கிழவன்.
தோழன்போய் மீண்டுவந்து சொல்லுகின்றான்: ஐயாவே
வாழைத் துடையுடைய வஞ்சிவந்து காத்திருந்தாள்
சொன்னதெல்லாம் சொன்னோன் துடித்துவிட்டாள் காதலினால்.

கன்னலின் சாற்றைக் கடிதுண்ண வேண்டுமென்றாள்.
காற்றாய் விரைந்துவந்து கட்டித் தழுவிமையல்
ஆற்றாவிடில் நான் போய் ஆற்றில் விழுந்திறப்பேன்,
என்று பறந்தாள். இதோ என்றேன், ஓடி வந்தேன்
சென்றுபே ரின்பத் திரைகடலில் மூழ்கிடுவீர்
போய்வாரீர் என்று புகன் றுதோ ழன் மறைந்தான்.

வாய்வழியும் எச்சிலோடு காலால் வழிதடவி
முள்ளில் விழுந்தெழுந்து முன்காலில் புண்ணடைந்து
கள்ளுண்டான் போல்உடல் தள்ளாடிக் காலிடறிச்
சோளம்வளர் கொல்லையிலே நின்றிருந்த தோகையினை
மூளும் வெறியாலே மொய்குழலே என்றணுகித்
தாவி அணைந்தான், தனித்திருந்த அவ் வைக்கோற்
பாவையுடன் வீழ்ந்தான் படுகிழவன்! அண்டை
மறைந்திருந்த தோழன், அங்குவந் திருந்தவர்பால்
அறைவான்:

கிழவன் மணம் கேட்பான் அஃதியற்கை
தன்னொத்த மூத்தாளைத் தான்தேடல் வேண்டும். இள
மின்னொத்தாள் வேண்டும் எனல் தீது.

(வைக்கோற் பாவை-விளைவுள்ள நிலத்தில், வைக்கோலால்
செய்து நிறுத்தப்படும் புல்லுரு.)

- 1948

*(சிங்கப்பூர "தமிழ் முரசில்" வெளிவந்தது)*



# 12 எது பழிப்பு?

1

பத்து வயதில் பழனியப்பன் வீட்டினிலே
முத்தம்மை என்னும் முதிராத செங்கரும்பு
வேலைசெய்திருக்கையிலே வேம்பென்னும் தாயிறந்தாள்.
மேலுமோர் ஆண்டின்பின் தந்தையாம் வீரப்பன்
தானும் இறந்தான். தனியாக முத்தம்மை
கூனன் வரினும் குனிந்துபுகும் தன்குடிலில்
வாழ்ந்திருந்தாள் அண்டை அயல்வாழ்வார் துணையோடு!
தாழ்ந்திடுதல் இன்றியே தன்வருமா னத்திலே
நாளைக் கழித்துவரும் நங்கை பருவமுற்றாள்.
தோளை அழகுவந்து கௌவியது, முன்னிருந்த
வண்ண முகமேதான் வட்டநிலா ஆகியது.
மொட்டு மலர்ந்தவுடன் மொய்க்கின்ற வண்டுகள்போல்
கட்டழகி அன்னவள்மேல் கண்வைத்தார் ஆடவர்கள்.

2

அச்சகத்தில் வேலைசெய்யும் அங்கமுத்துத்தான் ஒருநாள்
மெச்சுமெழில் முத்தம்மை மெல்லியினைத் தான்கண்டு
தன்னை மணந்துகொண்டால் நல்லதென்று சாற்றினான்,
இன்ன வருமானம் இன்னநிலை என்பவெல்லாம்
நன்றாய்த் தெரிந்துகொண்டு நல்லதென்றாள் முத்தம்மை.
ஊரார்கள் கூடி ஒருநாள் திருமணத்தைச்
சீராய் முடித்தார்கள். செந்தமிழும் பாட்டும்போல்
அங்கமுத்து முத்தம்மா அன்புடனே வாழ்ந்துவந்தார்
இங்கிவர்கள் வாழ்க்கை இரண்டாண்டு பெற்றதுண்டு

வாய்ச் சொல்லாய்த் "தோளில் வலி" என்றான். மட்டாகக்
காய்ச்சல்என்று சொன்னார் மருத்துவரும் கைபார்த்து!
நாலு நாட் பின்னை நளிர்ஏற நாவடங்கிப்
பாலும்உட் செல்லாத பான்மை ஆடைந்தே
இறந்துவிட்டான் அங்கமுத்து! முத்தம்மை மார்பில்
அறைந்தபடி கூவி அழுது புரளுகையில்
அண்டை அயலுள்ளார் அங்கமுத்தின் மெய்கழுவித்
தொண்டர் சுமக்கச் சுடுகாட்டை எய்துவித்தார்.
நாள்கள்நில் லாது நடந்தன! முத்தம்மை
வாட்டுகின்ற ஒவ்வோர் நொடிக்கும் மனம் பதைத்தாள்.
அங்கமுத்து மாண்டான். அறுபதுநாள் சென்றபின்னும்.
எங்கும் அவனே என அழுதாள் முத்தம்மை!
மாதங்கள் மூன்று மறைந்தபின்னும், அங்கமுத்தின்
காதில் விழும் என்றழைப்பாள் கண்ணாளா என்று!

4

துணைவனைச் சுட்ட சுடுகாட்டை நோக்கி
இணை விழிகள் நீர்பெருகச் சென்றாள். இடையிலே
நள்ளிரவில், மக்கள் நடப்பற்ற தோப்பினிலே
பிள்ளையின் பேர்சொல்லிக் கூவினாள் அங்கொருத்தி.
தங்கமுத்தே தங்கமுத்தே என்றபெயர் தான்கேட்ட
மங்கையவள் முத்தம்மை வந்தான் கணவனென்று.
நின்றாள். விழியால் நெடிதாய்வாள் தோப்பெல்லாம்.
தன் துணைவன் போலத் தனியாக வந்துநின்றான்.
யார் என்றுகேட்டாள். நீ யார்என்றான் வந்தவனும்.
தேரோடும் போதே தெருவில்அது சாய்ந்ததுபோல்
மாண்டார்என் அத்தான் மறைந்தார் சுடுகாட்டில்
ஈண்டுநான் வந்தேன் எதிரில் உமைக்கண்டேன்.
உம்பெயரை யாரோ உரைத்தார் அது துணைவர்
தம்பேர்போல் கேட்டதனால் தையலுள்ளம் பூரித்தேன்.

என்பெயரோ முத்தம்மை என்றாள், அதுகேட்டுத்
தன்பெயர் தங்கமுத்தென்றான். தளர்வுற்றாள்.
தூயான் எரிந்த சுடுகாடு போகலுற்றாள்.
நீஏன் சுடுகாட்டை நேர்கின்றாய் மங்கையே
நானுன் மணவாளன்! நானுன் மணவாளன்!
தச்சுவே லைசெய்யும் தங்முத்துப் பேர்சொன்னால்
மெச்சாதார் யாருமில்லை மெய்ம்மைஇது கேட்டுப்பார்.
தன்னத் தனியாய்நீ நானும் உடன் வருவேன்
என்றான். அவளும் எதிரொன்றும் கூறாமல்
சென்றாள். உடன்சென்றான், செங்கதிரும் கீழ்க்கடலில்
தோன்றியது. தோகைக்கும் தங்கமுத்தின் மேல் உள்ளம்
ஊன்றியது. தாமே உறுதிசெய்தார் தம்மணத்தை.

தங்கமுத்தின் அன்னை தளர்ந்த பருவத்தாள்
மங்காத செல்வம்போல் வாய்த்த மருமகளைக்
காணும்போ தெல்லாம் மகிழ்ச்சிக் கடல்படிவாள்;
ஆணகழகன் தன்மகனும் அன்பு மருகளும்,
வேலையில்லாப் போது விளையாடல் தான்கண்டு
மூலையினில் குந்தி முழுதின்ப மே நுகர்வாள்.
ஆண்டொன்று செல்லஅவள் ஆண்குழந்தை ஒன்று பெற்றாள்.
ஈண்டக் குழந்தைக் கிரண்டுவய தானவுடன்
தங்கமுத்து மாண்டான். தளர்ந்தழுதாள் முத்தம்மை
மங்கை நிலைக்கு வருந்தினாள் அக் கிழவி.

5

மாமிதன் வீட்டினை நூறு வராகனுக்குச்
சாமியப்ப னுக்கவிற்றுத் தையலிடம் தந்து
கடையொன்று வைக்கக் கழறினாள். அன்னாள்
உடனே கடைதிறந்தாள். ஊர்மதிப்பும் தான்பெற்று
வாழ்கையில் ஓர்நாள், மனைவி தனைஇழந்த

கூழப்பன், மங்கையிடம் தன்குறையக் கூறலுற்றான்.
மாடப் புறாப்போல் மயில்போல் குயில்போலத்
தேடி மணந்தேன். பத்தாண்டும் செல்லப்
பிள்ளையில்லை. வேறேஓர் பெண்ணையும் நீமணந்து
கொள்ளென்றாள். கோதையே நீயிருக்கு மட்டும்
எவளையும் தீண்டேட நான் என்று முடித்தேன்;
அவள் அன்று மாலை அனல்மூழ்கி மாண்டுவிட்டாள்.
இப்படிச்செய் வாள்என் றெனக்குத் தெரிந்திருந்தால்
அப்படிநான் சொல்ல அணுவளவும் ஒப்பேன்.
மணம்புரிய வேண்டும்நான் மக்கள்பெற வேண்டும்.
தணல்மூழ்கி னாளின் எண்ணமிது தான்என்றான்.
கேட்டிருந்த முத்தம்மை கிள்ளிஎறி பூங்கொடிபோல்
வாட்டம் அடைந்தாள். மனமெல்லாம் அன்பானாள்.
என்னை மணப்பீரோ என்றன் அருமை மகன்
தன்மைஉம் பிள்ளையெனத் தாங்கத் திருவுளமோ?
ஐயாவே என்றாள். உடனே, அருகிலுறும்
பையனைஅன் னேன் தூக்கிப் பத்துமுறை முத்தமிட்டான்.

6

தங்கமுத்தின் தாய்கண்டாள் கூழப்பனின் உருவில்
தங்கமுத்தை யேகண்டாள்! தணியாத அன்பினால்
வாழ்த்தினாள் முத்தம்மை கூழப்பன் மாமணத்தை!
வீழ்த்தினார் அவ்விருவர் மேல்வீழ்ந்த துன்பத்தை!
பூவும் மணமும்போல் பொன்னும் ஒளியும்போல்
கோவையிதழ் முத்தம்மை கூழப்பன் இவ்விருவர்
ஒத்தின்ப வாழ்வில் உயர்ந்தார். வாணிகமும்
பத்துப்பங் கேறியது. பையன் வயதும்
இருப தாயிற்று. மணம் செய்யஎண்ணிப்
பெருமாளின் பெண்ணைப் போய்ப் பேசுவதாய்த் திட்டமிட்டார்.

7

மாலையிலே முல்லை மலர்ப்பொடியைத் தானள்ளிச்
சோலையெலாம் வண்டிருந்து சூறையிடும் தென்றலிலே
மேலாடை சோர விளையாடும் தோகைஎதிர்
வேலன் வரலானான். கண்டாள் விளம்புகின்றாள்:
உம்மைக் கடைத்தெருவில் கண்டேன் நெடுநாள் பின்
மெய்ம்மறவர் வாழ்தெருவில் கண்டு வியந்ததுண்டு.
எந்தப் பெண்ணுக்கா இவ்வுலகில் வாழ்கின்றீர்?
அந்தப்பெண் உம்மை அடையப் புரிந்ததவம்
யாதென்றாள். வேலன் இயம்பத் தலைப்பட்டான்.
காதலெனும் பாம்புக் கடிமருந்து நீஎன்று,
தேடிவந்தேன் ஒப்புதலைச் செப்பிவிடு. நீவெறுத்தால்
ஓடிஇதோ என்உயிர் மாய்த்துக் கொள்ளுகின்றேன்
என்றான், உனக்கு நான் என்றாள். உவப்புற்றான்.
நின்றாளின் நேர்நின்றான். நீட்டிய கைம்மேல் விழுந்தாள்.
மாலை மறைந்ததையும், வல்லிருட்டு வந்ததையும்,
சோலை விளக்கம் தொலைந்ததையும் தாம் உணரார்.
குப்பத்து நாய்தான் இடிபோற் குரைத்ததனால்
ஒப்பாமல் ஒப்பி உலகை நினைத்தார்கள்.
விட்டுப் பிரியமனம் வெம்பிப் பிறர்விழிக்குத்
தட்டுப் படாதிருக்கத் தத்தம் இடம்சேர்ந்தார்.

8

பெருமா ளிடம்சென்றான் கூழப்பன், பெற்ற
ஒருமகளை வேலனுக்கே ஒப்படைக்க வேண்டுமென்றான்.
தாயோ பழியுடையாள், தந்தையும் நீயல்லை,
சேயோ திருவில்லான் என்றான் பெருமாள்.
வருந்தினான் கூழப்பன் வாழ்க பெருமாள்
மருமக னாவதற்கு வாய்த்தபல பண்புகள்

பையனிடம் உண்டா எனப்பாரும் மற்றவரை
நைய உரைத்தல் நலமில்லை என்றுரைத்தான்.
விண்ணில் கிடக்கின்றான் மாற்றம் உணர்ந்தாயோ
என்றான் பெருமாள். எதிரே ஆள் நீள் அஞ்சல்
ஒன்றைப் பெருமாள்பால் நீட்டிவிட் டோடிவிட்டான்.
வீட்டின் ஒரே அறைக்குள் வேலனும் தோகையும்
காட்டுப் புறாக்களைப்போல் காதல் நலம் காணுகின்றார்
ஒத்த உளத்தை உயர்ந்த திருமணத்தைப்
பத்துப்பேரைக் கூட்டிப் பாராட்ட எண்ணமுண்டா?
பாராட்டு நல்விழா எந்நாள்? இருபெற்றோர்
நேரே உரைத்திடுக. நெல்லிமா வீட்டிலுள்ளார்.
இங்ஙனம் தோகையாள் வேலன் இருவர் ஒப்பம்.
அங்கே இதைப்படித்தான் ஆம் ஆம் பொருத்தம் என்றான்.
வேலவன் தோகை விழைவின் விழாவையே
ஞாலமே வாழ்த்தியது நன்று.



# 13 கடவுளைக் கண்டீர்

**தாய்**

பாம்பு கடித்ததம்மா பச்சைக் குழந்தையினை
மாம்பூ மலையில் மருந்திருக்கும் என்கின்றார்
நீதான் மருத்துவச்சி நீயதனை நன்கறிவாய்
தீது வருமுன்னே தேடிவந்து தந்திடுவாய்.

**மருத்துவிச்சி**

சிட்டாய்ப் பறந்திடுவேன் சேயிழையே அஞ்சாதே
கட்டாயம் பிள்ளையினைக் காத்திடுவேன் அஞ்சாதே
கூடக் கணவனையும் கூட்டிநான் போய்வருவேன்.

(போதல்)

**மத்துவன்**

எங்கே நீ சென்றிருந்தாய் என்னருமைக் கண்ணாட்டி!
தங்கமே நீ பிரிந்தால் தாங்கிடுமோ என் உள்ளம்?

**மருத்துவிச்சி**

தெற்குத் தெருவினிலே செங்கேணி ஆச்சிபிள்ளை
பற்கிட்டித் தொல்லை படுகின்ற நேரமிது!
பாம்பு கடித்த தத்தான் பச்சிலைக்குப் போவோமே
மாம்பூ மலைநோக்கி வாராய் விரைவாக.

(போகிறார்கள்)

**மருத்துவன்**

வெய்யில், நடப்பாரை வேகடிக்கும் நேரமடி
ஐயோ நடுவழியில் அல்லல் மிகுத்ததடி

**மருத்துவச்சி**

அல்லல் மிகுத்தாலும் அத்தானே ஆச்சிபெற்ற
செல்வனை நாம் காப்பாற்றச் செல்வோம் விரைவாகச்
செங்காடு தாண்டிச் செழுங்காட்டை நாம் அடைந்தோம்
வெங்காயக் காட்டை விலக்கி அதோ தெரியும்
மாம்பூ மலையில் மருந்தெடுக்க மாட்டோமோ?
பாம்புக் கடிவிலக்கும் பச்சிலையைத் தேடோமோ?
(போகிறார்கள்)

**மருத்துவச்சி**

அத்தான்என் காலிலே ஆணிமுள் தைத்துவே
தைத்த இடத்தினின்று செங்குருதி சாய்ந்திடுதே.

**மருத்துவன்**

கண்ணே மணியேஎன் கட்டிக் கரும்பனையாய்
வண்ணாத்திப் பூச்சி இறக்கைபோல வாய்த்த உன்
மெல்லடியின் உட்புறத்தில் வேல்பாய்ந்தால் என்னாகும்?
சொல்லடிநீ மேல் நடக்கத் தோதுபடுமா என்ன?

**மருத்துவச்சி**

ஆணிமுள்ளை வாங்கிவிட்டேன் அத்தானே புண்வாயைப்
பேணத் துணி கிழித்துக் கட்டிவிட்டேன் பேச்சென்ன?
இன்னும் விரைவாய் நடப்போம் இளையானைத்
தின்னும்அந்த நஞ்சுதனைத் தின்ன இலைபறிப்போம்.
(போகிறார்கள்)

**மருத்துவன்**

புள்ளிச் சிறுத்தைஒன்று போர்முரசு கொட்டியது
அள்ளிச் சொரிந்ததுவே நம்மேல் அனல்விழியை.

**மருத்துவச்சி**

அத்தானே அத்தானே என்னண்டை வந்திடுவாய்
செத்தாலும் சாகின்றேன் நீஎதிரே செல்லாதே,
பாயும் சிறுத்தைமேல் பாய்ச்சிடுவேன் என்கத்தி
நாயின் விலாவின் நடுப்பாயும் என்கத்தி.

**மருத்துவன்**

சாக்காட்டுக் கஞ்சும் சழக்கன்நான் இல்லையடி
நோக்காட்டுக் காலோடு நூலிழையே செல்லாதே,
வெள்ளரிக்காய் என்கத்தி வீச்சுக்கு நிற்குமா
தள்ளடிநீ அச்சத்தைத் தங்கடிநீ இவ்விடத்தில்.

**மருத்துவச்சி**

கத்தியினை மேலெடுத்துக் காட்டினையோ இல்லையோ
பத்தரிசிக் கோடுகின்ற பார்ப்பான்போல் ஓடிற்று.
வந்த சிறுத்தை ஆது வாலடங்க ஓடியது
முந்தநாம் சென்று முடிப்போம் நமதுபணி.

(போதல்)

**மருத்துவச்சி**

செங்குத்தாய் நிற்குமலை! தேனேநீ பார்த்தேறாய்
அங்குள்ள பள்ளத்தை ஆயிழையே பார்த்துநட!

(ஏறிப் போகிறார்கள்)

**மருத்துவச்சி**

அத்தானே நாம்தேடும் அம்மருந்தைக் காணோமே
எத்தொல்லை பட்டேனும் இங்கதனைத் தேடுவமே.

(தேடுகிறார்கள்)

**மருத்துவன்**

பாராய் இளமானே பச்சைப் பசேல்என்று
நேரே இலைகள் நெருங்கப் படர்ந்தகொடி
எட்டா உயரத்தில் உள்ளதடி என்மயிலே
நெட்ட நெடும்பாரை நீளுச்சி மேலேறிக்
கையால் பறிக்கையிலே கால்தவறி விட்டாலோ
பொய்யாகிப் போகுமடி வாழ்வு புதுநிலவே.

**மருத்துவிச்சி**

நானேறுகின்றேன் நலிவின்றி நீயிருப்பாய்
ஊனெடுத்தோம் என்ன பயன்? ஊருக்கு உழைப்போமே

**மருத்துவன்**

கட்டாணி முத்தேஎன் காதலியே நீபொறுப்பாய்
எட்டா இலைதன்னை எட்டிப் பறித்திடுவேன்.
(ஏறுகிறான், பறிக்கிறான்)

பாரை வழுக்கிடுதே பாவையே என்செய்வேன்
வாராத சாக்காடு வந்ததடி வந்ததடி!

(விழுகிறான் மனைவி முதுகால் தாங்குகிறாள்.
இருவரும் தரையில் வீழ்ந்து
அடிபட்டுக் கிடக்கிறார்கள் எழுகிறார்கள்)

**மருத்துவன்**

மெல்ல நடப்போம்நாம் வேளையுடன் வீடுசெல்வோம்
சொல்லிய வண்ணம் சுருக்காக நாம்செல்வோம்
பாம்பால் கடிபட்ட பச்சைக் குழந்தைக்கு
நாம்போய் உயிர்மீட்போம் நல்லத்தான் வாராயோ!
(போகிறார்கள்)

**தாய்**

வந்தீரோ! ஐயோ இலைகொண்டு வந்தீரோ?
தந்தால்என் பிள்ளை தலைஏறும் நஞ்சுதனை
நீக்கலாம் இல்லையெனில் நீங்குமே பிள்ளையுயிர்
வாய்க்குள் இலைச்சாற்றை வார்க்கவோ சொல்லுகின்றீர்?
(இலைச்சாற்றைப் பிள்ளைக்கு வார்க்கிறாள்)

**மருத்துவிச்சி**

பிள்ளை விழித்ததுவே! பெற்றவளே பார்த்தாயா,
துள்ளி எழுந்ததுவே தூயவளே உன்பிள்ளை!

**சூழ்ந்திருந்தவர்களில் ஒருத்தி**

என்ன புதுமை இறந்தோன் உயிர்பெற்றான்!
சின்னஞ் சிறியோன் திடுக்கென் றெழுந்தானே!

**மற்றொருவன்**

செத்தார் பிழைக்கவைக்கும் சின்னஇலை கொண்டுவந்த
இத்தூய் மருத்துவருக் கென்கொடுத்தா லுந்தகுமே.

**தாடி நிறைந்த தள்ளாதவர்**

அன்புடையீர் என்றன் அருமை மருத்துவரே
என்பேரன் உம்மால் பிறந்தான், இறந்தபின்பு
பாடெல்லாம் பட்டீர், பகலெல்லாம் வெய்யிலிலே
காடெல்லாம் சுற்றிக் களைப்பில் மலையேறி
வீழ்ந்துபுண் பட்டு விரைவில் குழந்தைநிலை
ஆழ்ந்து நினைத்தேபின் அல்லலொடும் இங்குவந்தீர்?
காத்தீர்! உமக்கென்ன கைம்மாறு வேண்டும், அதை
ஆத்தாநீ சொல்வாய் என் அன்பனே நீசொல்வாய்!

**மருத்துவன்**

அப்பரே நீர்ஓர் அறிஞரென எண்ணுகின்றேன்,
ஒப்பார் இலாத உயர்புலவர் நீர்போலும்
உம்மைநான் கேட்பதெலாம் ஒன்றுதான் என்னவெனில்
கைம்மேற் கனிபோல் கடவுளைநீர் காட்டிடுவீர்
உம்போன்றார் இந்த உலகில் கடவுளை
எம்போன்றார் காண எதிரினிலே காட்டினராம்.
நானும்என் காதலியாம் நங்கையும் காணும்வகை
ஆனதுசெய்தால் அதுபோதும் போதும்.

**தாடி**

கடவுளைநான் உங்கட்குக் காட்டல் எளிதே
நடையுலகில் நீங்களது நம்பல் அரிதாகும்,
கோயிலி னுள்ளே குருக்கள்மார் காட்டுகின்ற
தூய உருவங்கள் கல்தச்சர் தோற்றுவித்தார்,
கண்டீர் அவைகள் கடவுள்கள் அல்லஅல்ல.
குண்டான் பெருவயிறு கொண்டிருக்கும் ஓர் உருவம்
ஆறுமுகம் ஐந்துமுகம் நாலுமுகம் ஆகுமென்று
கூறுமுகம் யாவும் கடவுளெனக் கூறாதீர்.
இந்துமதம் சொல்லுகின்ற யாதும் கடவுளல்ல,
பிந்திவந்த ஏசுமதப் பேறும் கடவுளல்ல,
ஓதுநபி காட்டும் ஒலியும் கடவுளல்ல,
எவ்வுருவும் எப்பெயரும் இல்லை கடவுளுக்கே.
அவ்வியமோ பற்றோ கடவுள் அடைவதில்லை
ஊருக்குழைக்கும் உணர்வே கடவுள் ஆம்.
ஊருக்குழைக்கும் உணர்வை உம் முட்கண்டீர்
கண்டீர்நீர் அந்தக் கடவுளையே மெய்யாகக்
கண்ட கடவுள்தான் காட்டியதோர் இன்பத்தைப்
பெற்றீர் அதைவிளக்கிப் பேசுகின்றேன் கேட்டிடுவீர்:

தொல்லையெலாம் ஏற்றீர்கள் தூயதாம் பச்சிலையால்
அல்லல் அடைந்த அயலாரின் பிள்ளையின்
ஆருயிர் காத்தீர் அகமார இன்புற்றீர்
தேரீரோ நீர்பெற்ற இன்பத் திருப்பயனை
உம்மை நான் வாழ்த்துகின்றேன் நெஞ்சார ஒப்பிலா
அம்மையே அப்பா இனிது.



## 14 உரிமைக் கொண்டாட்டமா?

### உரிமை மிகத் தொலைவில் இருக்கிறதே!

புல்வெளி, சிறிய குன்று, புனல்வற்றா ஓடை சார்ந்த
நல்லதோர் காடு நோக்கி நடந்தனர் வேடர் சில்லோர்.
வல்வலை கட்டி னார்கள்; விலங்குகள் வளைக்க லானார்;
ஒல்லெனப் பறை தப்பட்டி ஒலித்தனர் காட்டில் எங்கும்!

தாய்க்குதி ரைதன் குட்டி தன்னொடு நடுக்கம் எய்தி
ஏய்ப்பவர் கட்டி வைத்த வலையினில் ஏகி வீழச்,
சாய்த்தனர் தரையில் வேடர் தாம்பினால் கட்டிச் சென்றார்!
தாய் செல்லும் குட்டி செல்லும் தம்காட்டைப் பார்த்த வண்ணம்!

குட்டியைத், தாயை, வேடர் குப்பன்பால் விற்று விட்டார்.
அட்டியில் லாது குப்பன் அவைகளை வளர்த்து வந்தான்
குட்டிதான் வண்டிக் காகும்; குதிரைவீண் என்று கண்டான்.
கொட்டிலில் தாய்வ ருந்திக் கிடந்தது காட்டை எண்ணி!

மண்டிடு தீனி தின்று வளர்ந்திட்ட குட்டி தன்னை
வண்டியிற் பூட்ட லானார்! வருத்தத்தை வழக்க மாக்கிக்
கொண்டது குட்டி! ஓர்நாள் குடைசாய்ந்து போன தாலே
வணண்டியாற் பட்ட பாட்டை வந்துதன் தாய்க்குக் கூறும்:

வண்டியிற் கட்டப் பட்டு வருந்திடு கின்றேன் நாளும்!
புண்துடை தன்னிற் கொண்டேன்; புழுவெனத் துடித்தேன் அம்மா!
கொண்டதோர் அடிமை தாளேன் குன்றொத்த வண்டி தன்னை
அண்டாத நிலைமை பெற்றால் அதுவேஎன் உரிமை வாழ்வாம்!

என்றது குதிரைக் குட்டி! இதற்குள்ளே குப்பன் வந்து
குன்றுநேர் குட்டி தன்னை வண்டிக்குக் கொண்டு போனான்.
நின்றிட நேர மின்றி நெடுவண்டி தனை இழுத்துச்
சென்றிடும் இவ்வா றாகச் சென்றன பத்துத் திங்கள்.

வண்டியை இழுக்கக் குட்டி மறுத்தது! கண்ட குப்பன்
சண்டியே, இனிமேல் நீயோர் தனி "ஏறு குதிரை" என்றான்
குண்டான் கூழ் பெற்ற ஏழை குதிப்பெனக் குதித்துக் குட்டி,
வண்டியி னின்று பெற்ற விடுதலை வாழ்த்திற் றங்கே!

தன்ஏறு குதிரை மீது தான்ஏறிக் குப்பன் செல்வான்.
மின்போல உடல் நெளித்து விரைமான்போல் ஓடும் குட்டி.
பின்புறம் வண்டி யில்லை பெற்றேநான் விடுத லைதான்
என்றெண்ணி மகிழும் ஓர்நாள் ஏகிற்றுத் தாயின் அண்டை.

அம்மாநான் உரிமைப் பெற்றேன் அம்மாநான் மகிழ்ச்சி பெற்றேன்
இம்மட்டும் நான டைந்த இன்னல்கள் நீங்கப் பெற்றேன்.
அம்மிசுண் டெலிமேல் ஏறி அமிழ்த்தல்போல் என்னை வண்டி
இம்மண்ணில் இனிஅமிழ்த்தா தென்றது குதிரைக் குட்டி.

கடிவாளத் தால் கிழிந்த கடைவாயில் குருதியாறு
வடிந்திட எதிரில் நின்று மகிழ்ந்திடும் குட்டி தன்னை
உடைந்தஉள் ளத்தால் நோக்கி உரைத்தது கிழத்தாய்: ஏஏ
அடிமையே உனைப் பிணித்த ஆங்கில வண்டி யில்லை.

வடக்குள குப்பன் உன்றன் வன்முது கின்மேல் ஏறிக்
கடிவாளம் இறுக்கு கின்றான் கருதினாய் இல்லை! வாயில்
வடிகின்ற குருதி காணாய்! வலிஉணர் கின்றா யில்லை
அடிமையை வியந்தாய் உன்றன் அகத்தினில் இருளைச் சேர்த்தாய்.

வீழ்ந்தனை அடிமைச் சேற்றில் : விடுதலை விழாமேற் கொண்டாய்!
ஆழ்ந்துபார் உன்நா டெங்கே? அருங்கலை ஒழுக்க மெங்கே?
தாழ்ந்து தாழ்ந் தெவனை நீபோய்த் தாங்கிட ஒப்பு கின்றாய்?
வாழ்ந்தநம் உரிமை வாழ்வை நினைக்கவும் மறுக்கின் றாயா?

கடிவாளப் பிடிப்புக் கப்பால், கதைத்திடு மதமென் கின்ற
நெடுங்குன்றுக் கப்பால், சாதி நிறைமுள்ளுக் காட்டுக் கப்பால்
மடிவிலாக் கலை, சொல் பூக்கும் மணிப்புனல் ஓடை தன்னை
உடையபுல் வெளியி லன்றோ உன் முழு துரிமை உண்டு!

என்றுதாய்ப் பரி உரைத்தே எதிரில்தன் குட்டி தன்னை
நன்றொரு முறையும் நோக்கி நளிர்புனல் ஓடை தன்னை,
மின்னுபுல் வெளியை நெஞ்ச வெளியினி நோக்கி நோக்கித்
தன்னுயிர் விட்ட தங்கே தன்குட்டிக் குரிமை காட்டி!

**கதைப் பாடல்கள் முற்றிற்று**